



கவனத்தைக் குவித்தல் – மனதைக் குவித்தல் என்னும் இதனை **மனோலயம்** என்று கூறுகிறோம். அப்படி குவிந்திருந்த கவனம் அல்லது மனம் அந்தக் குவிதலில் இருந்து விடுபட்டு இருப்பதை **மனோ நாசம்** என்று கூறுகிறோம்.

அப்படி விலகி இருப்பது தான் மிகப்பெரிய பேறு என்றும் அனைவரும் அடைய வேண்டிய உன்னதமான நிலை என்றும் கூறப்படுகிறது. அதுவே முக்தி, மோட்சம் என்று ஆன்மிக இலக்கியங்கள் அனைத்தும் ஏகோபித்து கொண்டாடுகின்றன.

– ஸ்ரீ பகவத்

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

**ஞானியர் அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.**

உலகில் பலரும் மன அழுத்தத்துடனும் மனப் போராட்டத்துடனும் சிக்கலோடும் வாழ்ந்து வருகின்றனர்.

இதுவே பல உடல் நோய்களுக்கும்கூட காரணமாக அமைந்துவிடுகிறது.

அனைத்து மனப் பிரச்சினைகளுக்கும் தீர்வாக அமைவதுதான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் வழங்கப்படும் ஞானப் புரிதல்.

இந்த ஒரு புரிதலே எல்லா மன அழுத்தங்களிலிருந்தும் விடுபட்டு புறத்தில் அவரவர்களின் முழுத் திறமையையும் வெளிப்படுத்தி நிம்மதியாக வாழ்வதற்கும் ஒரு சிறந்த மனிதனாக வாழ்வதற்குமான தகுதியை வழங்கிவிடுகிறது.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

இது மிகவும் ஆச்சரியமானதாக இருந்தாலும் இதுதான் நடைமுறை உண்மை.

மனதின் இயக்கத்தைப் பற்றிய இப் புரிதல் ஒன்றே நம் மனப் போராட்டத்தை முடிவுக்கு கொண்டுவந்து, நம் வாழ்வையே வளமான வாழ்வாக மாற்றிவிடுகிறது.

**ஆன்மிகத்தில் நெடுங்காலமாக பயிற்சி, முயற்சி செய்தவர்களுக்குங்கூட கிடைக்காத பலன், இப்புரிதலை புரிந்த கணமே கிடைத்துவிடுகிறது.**

ஆதலால்தான் இந்தப் புரிதல் ஆன்மிகத்தையே அடுத்தக்கட்ட முன்னேற்றத்துக்கு அழைத்துச் செல்கிறது என்று குறிப்பிடுகிறோம்.

இவ்வுண்மையை, தேடுதல் உள்ள அனைவருக்கும் கொண்டு செல்வதே நமது ஸ்ரீ பகவத் மிஷனின் பணியாகச் செய்து வருகிறோம்.

அந்த வகையில் நேரடி ஞானமுகாம் நடத்த முடியாத கடந்த பத்து மாதங்களாக ZOOM MEETING வாயிலாக சத்சங்கங்கள் நடத்திவருகிறோம். இதன்மூலம் பலர் தெளிவடைந்து வருகின்றனர்.

மேலும், ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி ஜுன் மாதம் முதல் நேரடியாக ஞான முகாம் நடத்த உள்ளோம்.

இப் புரிதலை வழங்கும் ஐயாவின் நூல்கள் மற்றும் பகவத் பாதை மாத இதழ்கள் அனைத்தையும் இணையதளத்தில் இலவசமாக பதிவிறக்கம் (Download) செய்யும் வசதியையும் செய்துள்ளோம்.

மேலும் ஐயாவின் நூல்களையும் மிகக் குறைந்த விலையில் வழங்கி வருகிறோம்.

நாம் நமது பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கில் எந்தப் பணியும் செய்வதில்லை. புரிதலால் பலரும் பயனடைவது நமக்கு ஊக்கமளிப்பதாகவும் அமைவதால் நமது தனிப்பட்ட பணிகளுக்கு இடையே நேரத்தை ஒதுக்கி அனைவரும் பயனடையவேண்டும் என்ற நோக்கத்திலேயே இப் பணியைச் செய்துவருகிறோம்.

இருப்பினும் நமது ஸ்ரீ பகவத் மிஷனின் நிர்வாகச் செலவுகளை எதிர் கொள்ளவேண்டிய கட்டாயத்திலும் உள்ளோம். ஆதலால் ஸ்ரீ பகவத் மிஷனின் குடும்ப உறுப்பினர்களாகக் கருதும் நீங்கள் அனைவரும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமாவது மாதந்தோறும் ரூபாய் 1000/– அல்லது ரூபாய் 500/– வழங்கி உதவ வேண்டுகிறோம். இந்தப் பங்களிப்பு இந்த ஞானப் புரிதலை அனைவருக்கும் எடுத்துச் செல்லும் நமது பணிக்கு பேருதவியாக அமையும்.

**உண்மையைப் புரிந்து கொள்வோம்!**
**புரிதலை உலகிற்கே பகிர்வோம்!!**





# மாணவர் நலம்
# 2. மனக்குவிதல் (Concentration)

- ஸ்ரீ பகவத்

வகுப்பில் மாணவர்கள் அமர்ந்திருந்தனர். கணித ஆசிரியர் மிகுந்த அக்கறையுடன் புதியதொரு கணிதத்தை நடத்திக் கொண்டிருந்தார்.

வகுப்பறைக்கு வெளியே இருந்த பெரிய மரம் ஒன்றிலிருந்த பொந்தில் அணில் ஒன்று குட்டிகளை ஈன்றிருந்தது. தாய் அணில் ஏதோ ஒருவித உணவைக் குட்டிகளுக்காக எடுத்துவந்து குட்டிகளுக்குக் கொடுத்துக்கொண்டிருந்தது. அந்தத் தாய் அணில் அந்தப் பொந்தினுள் உள்ளே பாதியும் வெளியே பாதியுமாக நுழைந்திருந்தது. மாணவன் ஒருவன் பாடத்தை கவனிப்பதை விட்டுவிட்டு அந்த அணிலைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

அந்த மாணவன் பாடத்தில் அக்கறையில்லாமல் இருந்ததைக் கவனித்த ஆசிரியர். ”நான் நடத்தியது உனது தலையினுள் நுழைந்ததா?” என அவனைக் கூப்பிட்டுக் கேட்டார்.

”முழுவதும் நுழையவில்லை சார். வால் மட்டும் வெளியேதான் உள்ளது,” என்று பதிலளித்தான்.

பாடத்தில் மனம் குவித்திருந்தால் மட்டுமே பாடம் நடத்துவது மாணவர்களுக்குப் புரியும். அப்படிக் குவிந்திடாமல் மனம் அலைபாய்ந்து கொண்டிருந்தால் ஒருவரால் எதனையும் புரிந்து கொள்ள முடியாது.

இப்போது ஒரு கேள்வி.

”மனம் இவ்வாறு குவிந்திடுவது சரியானதா அல்லது குவிந்திடாமல் இருப்பது சரியானதா?”

மனம் குவிந்திடுவதன் மூலமே நம்மால் எதனையும் புரிந்துகொள்ள முடியும்.

மனம் குவியாவிட்டால் நம்மால் எதனையும் புரிந்துகொள்ள முடியாது.

நாம் ஓர் உதாரணத்தைப் பார்த்தோம். பாடத்தை கவனிக்க வேண்டிய மாணவன் அதனைக் கவனிக்காது அணிலை நோக்கித் திரும்பிவிட்டான்.

அவனது கவனம் பாடத்தில் குவியாமல் அதிலிருந்து விலகிவிட்டது.

அவனது கவனம் குவிந்திருப்பது சரியானதா அல்லது குவிந்திடாமல் இருப்பது சரியானதா?

குவிந்திருப்பதுதான் சரியானது எனத் தோன்றுகிறது.

ஆனால் உண்மையில் மனம் என்பது குவிதலோடு இருப்பதைவிட,

குவிதலிலிருந்து விடுபட்டிருப்பதுதான் சிறப்பானது.

குவிதல் மூலமாகத்தானே நாம் ஒவ்வொன்றையும் புரிந்துகொள்கிறோம். அந்த மாணவனுடைய கவனம் பாடத்தில் குவியாமல் அதிலிருந்து விலகியிருந்ததாலல்லவா அவனால் பாடத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

கவனம் இப்படிக் குவிந்திடாமல் விடுபட்டிருப்பது எப்படிச் சிறப்பானதாக இருக்கமுடியும்?

அந்த மாணவனின் கவனம் குவிந்துள்ளதா அல்லது குவிதலிலிருந்து விடுபட்டுள்ளதா?

விலகியுள்ளதாகத் தோன்றுகிறதே தவிர விலகவில்லை.

அந்த மாணவனுடைய கவனம் பாடத்தின் மீது குவியாமல் விலகிவிட்டதேதவிர அது எங்குமே குவியாமலில்லை.

அது பாடத்தில் குவிந்திடுவதற்குப் பதிலாக அந்த அணிலினுடைய செயல்பாடுகளின் மீது குவிந்துள்ளது.

பாடத்தின் மீது குவியாத காரணத்தால், பாடம் நடத்தியது அவனுக்குப் புரியவில்லை.

ஆனால் அவனது கவனம் குவிந்திருந்த

அணிலின் செயல்பாடுகள் அனைத்தும் அவனுக்குத் தெளிவாகவே புரிந்திருந்தன.

அவனைப் பொருத்து அவனது மனமும் குவிதலில்தான் இருந்திருக்கிறது. குவிதலிலிருந்து விலகியிருக்கவில்லை.

குவிதலிலிருந்து விலகியிருத்தல் இதுவல்லவென்றால்

அப்படி விலகியிருப்பது என்பது என்ன? ஏன் அது முக்கியத்துவம் மிகுந்ததாகப் பேசப்படுகிறது – போற்றப்படுகிறது?

அப்படி விலகியிருப்பதுதான் மிகப்பெரிய பேறு என்றும், அனைவரும் அடைய வேண்டிய உன்னதமான நிலையென்றும் கூறப்படுகிறது.

அதுவே முக்தி, மோட்சம் என்று ஆன்மிக இலக்கியங்கள் அனைத்தும் ஏகோபித்துக் கொண்டாடுகின்றன.

இப்படி கவனத்தைக் குவித்தல் மற்றும் இவ்வாறு குவிப்பதிலிருந்து விலகியிருத்தல் ஆகியவற்றை

வேறு விதமான பெயர்களைக் கொடுத்து விவரிக்கின்றன.

அதென்ன பெயர்கள்?

மனோலயம்

மனோ நாசம்

– என அவை குறிப்பிடப்படுகின்றன.

கவனத்தைக் குவித்தல் – மனதைக் குவித்தல் என்னும் இதனை

மனோலயம் என்று கூறுகிறார்கள்.

அப்படிக் குவிந்திருந்த கவனம் அல்லது மனம் அந்தக் குவிதலிலிருந்து விடுபட்டிருப்பதை

மனோநாசம் என்று கூறுகிறார்கள்.

மனோலயம், மனோ நாசம் என்ற சொற்களை ஆன்மிகத்திலிருந்து எடுத்துக் கொண்டதால்

நாம் அச்சங்கொள்ளத் தேவையில்லை.

அவை நமது அன்றாட வாழ்வில் எவ்வாறு நம்மோடு தொடர்பு கொண்டுள்ளது என்ற

நடைமுறை அம்சங்களை மட்டும் நாம் பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டால் போதும்.

ஆன்மிக உலகில் கூறப்படும் விநோதமான சம்பவம் ஒன்று பின்வருமாறு விவரிக்கப்படுகிறது.

நாமதேவர் என்னும் பக்தர் ஒருவர் பாண்டுரங்கன் என்னும் விட்டல் மீது பக்தியுடன் வாழ்ந்துவந்தார்.

அவருடைய பக்தியினால் மகிழ்ந்த பாண்டுரங்கனும் அடிக்கடி நேரில் தோன்றி நாமதேவரிடம் அளவளாவிவந்தார்.

கடவுளோடு நேரடியாக அளவளாவி வந்ததால் நாம தேவருக்கு தன்னைப்பற்றிய ஒரு தற்பெருமை ஏற்பட்டிருந்தது.

அத்தகைய தற்பெருமையிலிருந்து அவரை விடுவிக்க பாண்டுரங்கனும் முடிவு செய்தார்.

அந்த ஊரில் ஞான தேவர் என்னும் ஞானி ஒருவர் தீர்த்த யாத்திரையை முடித்துத் திரும்பியிருந்தார். அவரை வரவேற்ற ஞானியர் பலரும் கூடி அளவளாவிக் கொண்டிருந்தனர்.

அவர்களுள் ஒருவராக நாம தேவரும் கலந்துகொண்டிருந்தார்.

யாத்திரை முடிந்து வந்த ஞான தேவர் அங்கிருந்த மண்பாண்டம் செய்யும் தொழிலைச் செய்து வரும் கோராகும்பர் எனும் ஞானியிடம், ”நீங்கள் மண்பாண்டங்கள் சரியாக வெந்துவிட்டதா என்பதை உங்களிடம் உள்ள கோலினால் தட்டிப் பார்த்து கண்டுபிடிப்பீர்களோ, அப்படி இங்கே வந்திருக்கும் ஞானிகளையும் உங்கள் கோலினால் தட்டிப் பார்த்து, அவர்கள் ஞானப் பக்குவம் அடைந்து விட்டார்களா என்பதையும் சோதித்துப் பாருங்களேன்” என்று கூறினார்.

கோராகும்பரும் தனது கையிலிருந்த கோலினால் ஒவ்வொருவரது தலையிலும் மென்மையாகத் தட்டிக்கொண்டு வந்தார்.

அவர் கடைசியாக நாமதேவர் தலையிலும் தட்டிப் பார்க்க முனைந்தார்.

அது நாம தேவருக்குக் கோபத்தை ஏற்படுத்திவிட்டது.” என்னை சோதிக்கும் அளவுக்கு நீ என்னைவிடவும் உயர்ந்தவனா?” என்று கோராகும்பரைத் திட்டிவிட்டார்.

கடவுளே தன்னிடம் வந்து நேரடியாகவே அளவளாவிக் கொண்டிருப்பதால், தான் அனைவரிலும் உயர்ந்தவன் என்றே அவர் எண்ணிக் கொண்டிருந்தார்.

”எல்லாப் பாண்டங்களும் நன்றாக வெந்து பக்குவமடைந்துவிட்டன; இந்த ஒன்றைத் தவிர” என்று கூறி கோராகும்பர், நாமதேவரைச் சுட்டிக்காட்டினார்.

இதைக் கேட்டு அனைவரும் சிரித்து விட்டனர். நாமதேவர் அவமானப்பட்டுவிட்டார்.

ஆற்றாமையின் காரணமாக அவர் கோவிலுக்குச் சென்று பாண்டுரங்கனிடம் முறையிட்டார்.

”சுலபத்தில் எவருக்குமே காட்சி கொடுக்காத நீ என்னிடம் நேரடியாகவே வந்து ஒரு நண்பனைப்போல் பழகிவருகிறாய். நான் பக்குவம் அடையாதவனா?” என்று கேட்டார்.

பாண்டுரங்கனும் அவருக்கு ஆறுதல் கூறினார். ”நாம தேவா, உன்னைக் கேலி செய்து சிரித்தவர்கள் எவரும் சாமானியர்களல்லர். அவர்கள் அனைவருமே மகா ஞானிகள். அவர்கள் சிரித்தார்கள் என்றால் நிச்சயம் அதில் ஏதாவது காரணம் இருக்கும். இதைவிடவும் நீ தெரிந்து

கொள்ள வேண்டியது ஏதாவது இருக்கலாம்.”

”அப்படி ஏதாவது இருந்தால் அதையும் நீயே எனக்குக் கற்றுக் கொடுத்தால் என்ன?”

”நான் கற்றுக் கொடுக்கக்கூடாது. குரு வழியாகத்தான் அதை நீ கற்றுக்கொள்ள வேண்டும். தகுதியான ஒரு குருவை வேண்டுமானால் கூறுகிறேன். இந்த ஊருக்கு வடக்கே உள்ள பாழடைந்த சிவன் கோயிலில் அவர் தங்கியிருக்கிறார். அவரைச் சந்தித்து மீதியிருக்கும் பாடத்தையும் கற்றுக் கொள்,” என பாண்டுரங்கனும் கூறிவிட்டார்.

நாம தேவரும் புறப்பட்டு அந்த சிவன் கோயிலுக்குச் சென்றார். பராமரிப்பில்லாமல் இருந்த அந்தக் கோயிலில் பைத்தியத்தைப் போன்ற ஒருவர் படுத்துக் கிடந்தார்.

தனக்குத் தலையணை போல் சிவலிங்கம் ஒன்றை வைத்திருந்தார். அது போல் அவர் தனது கால்களைத் தாங்கவும் சிவலிங்கம் ஒன்றையே வைத்திருந்தார்.

பைத்தியக்காரத்தனமாகத் தோன்றிய அவரிடம் என்ன கேட்பது என்று தயங்கி நின்ற நாமதேவரிடம்,

”பாண்டுரங்கன் அனுப்பி வைத்தானா?” என்று அந்தப் பெரியவர் கேட்டார்.

நாம தேவரும் சற்றுத் தெம்பு வந்தவராக, ”பாண்டுரங்கனும் நானும் பேசிக்கொண்டதுகூட உங்களுக்குத் தெரிந்திருக்கிறது. இவ்வளவு விபரம் தெரிந்த நீங்கள் உங்கள் தலையைத் தாங்குவதற்கு சிவலிங்கத்தை வைத்திருப்பது போல், உங்கள் கால்களைத் தாங்குவதற்கும் சிவலிங்கத்தை வைத்திருக்கலாமா சுவாமி?” என்று கேட்டு தனது ஆதங்கத்தைப் பணிவுடன் வெளிப்படுத்தினார்.

அந்தப் பெரியவரும் வருத்தப்பட்டவராக, ”வயதாகி விட்டதல்லவா எனக்கு. பார்வை முழுமையாக இல்லை. எங்கே காலை வைப்பது என்று தெரியவில்லை. நீயே எனது கால்களைச் சற்று இடம் மாற்றி வைத்தால் அது எனக்குப் பெரிய உபகாரமாக இருக்கும்,” என்று கேட்டுக் கொண்டார்.

நாம தேவரும் அவருடைய கால்களை வேறு இடத்திற்கு நகர்த்தி வைத்தார்.

ஆனால் என்ன ஆச்சரியம், அவர் எங்கெங்கு கால்களை நகர்த்தி வைத்தாலும்

அங்கங்கு புதிதாக ஒரு சிவலிங்கம் முளைத்து வந்து அந்தப் பெரியவரின் கால்களைத் தாங்கிக் கொண்டது.

இவர் ஏதோ ஜாலம் செய்து இப்படி சிவலிங்கத்தை உருவாக்கி விடுகிறார். இதை எப்படித் தவிர்ப்பது என சிந்தித்து, அந்தப் பாதங்களைத் தமது மடியின் மீதே தாங்கிக் கொண்டார்.

”இனி எப்படி அவர் சிவலிங்கத்தை உருவாக்குவார்?” என நாமதேவர் எண்ணிக் கொண்டிருக்கும்போது நாமதேவரே சிவலிங்கமாக மாறிவிட்டார்.

இப்போது அவரே சிவனாக மாறிவிட்டார்.

அதன் பிறகு நாமதேவர் முன்பு போல் பாண்டுரங்கனைத் தேடி கோவிலுக்குச் செல்வதில்லை. அதனால் அவரைத் தேடிக்கொண்டு பாண்டுரங்கனே நாமதேவர் வீட்டுக்கு வந்துவிட்டார். கோவிலுக்கு ஏன் வரவில்லையென்றும் கேட்டார்.

”திருடா! நீ இவ்வளவு காலமும் என்னை ஏமாற்றிவிட்டாய். நீ வேறு, நான் வேறா?” என்று கேட்டார் நாமதேவர்.

”கடைசியில் நீயும் உண்மையைப் புரிந்து கொண்டாய்!” – என்று கூறிய பாண்டுரங்கன் அங்கிருந்து மறைந்து விட்டார்.

இப்படி நாம் எதுவாகவோ மாறி அமைந்துதான் மெய்யுணர்வு பெற வேண்டுமா?

மெய்யுணர்வு பெறுவதற்காக மட்டுந்தான் இப்படி நாம் மாறி அமைய வேண்டுமா?

ஒரு சுவாரசியத்துக்காக மட்டுமே இந்த ஆன்மிகக் கதையை விவரித்தோம்.

உண்மையில், மெய்யுணர்வை மட்டுமல்லாமல்,

நாம் எதை அறிவதாக இருந்தாலும், நாம் இப்படி அதுவாக மாறித்தான் அதனை அறிய முடியும்.

ஒரு மரத்தைப் பார்ப்பதாக வைத்துக் கொள்வோம்.

நான் மரத்தைப் பார்க்கிறேன் என்று சுலபமாகச் சொல்லிவிடலாம். ஆனால் மரத்தை மரம் என்று புரிந்துகொள்வதில் சில நடைமுறை அம்சங்கள் உள்ளன.

நான் மரத்தைப் பார்த்து ’மரம் ’என்று புரிந்துகொள்ள வேண்டுமானால் எனது மனமே சில கணங்களுக்கு அந்த மரமாக மாறி அமைந்து விடுவதால் மட்டுமே இது சாத்தியமாகிறது.

அப்படி மாறி அமைந்திடாவிட்டால் நம்மால் எதையுமே புரிந்து கொள்ள முடியாது.

மனிதரை மனிதர் என்றோ, மிருகத்தை மிருகம் என்றோ புரிந்துகொள்ள வேண்டுமென்றால்

நமது மனதே அவையாக சற்று நேரத்துக்கு மாறியமைந்துதான் புரிந்துகொள்கிறது.

நமது தந்தையைத் தந்தையென்றோ அம்மாவை அம்மா என்றோ நண்பரை நண்பர் என்றோ புரிந்து கொள்ள வேண்டுமென்றால்.

நமது மனமே சற்று நேரத்துக்கு அவர்களாக மாறிக்கொள்வதன் மூலமாக மட்டுந்தான் புரிந்துகொள்ள முடியும்.

இப்படி நமது மனமானது சற்று நேரத்துக்கு ஏதாவது ஒரு வடிவத்தை எடுத்துக் கொள்வதை

**”மனோலயம்”** என்று கூறுகிறோம்.



V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

**ஆசை வயப்பட்டு தவறானச் செயலை செய்துவிட்டேன். பயமாக இருக்கிறது. என்ன செய்வது ?**

**கேள்வி :** நான் ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் உரைகளைக் கேட்டும் புத்தகங்களைப் படித்தும் வருகிறேன். மனதின் இயக்கத்தை ஓரளவுக்கு புரிந்துகொள்ள முடிகிறது. என்னுடைய பிரச்சினை என்னவென்றால் ஆசை வயப்பட்டு சமுதாயத்தில் தவறு என்று கூறக்கூடிய ஒரு தவறான செயலைச் செய்துவிட்டேன்.

இந்த விஷயத்தைத் தெரிந்துகொண்ட எனது நண்பர் 'இந்த கர்மாவுக்கான பலனை நீ அனுபவித்துதான் தீர்க்கவேண்டும்' என்று கூறுகிறார். இது எனக்கு எதிர்காலத்தைப்பற்றிய பயத்தையும் தேவையற்ற சிந்தனைகளையும் ஏற்படுத்திவிட்டன. நான் இதை எவ்வாறு பார்க்கவேண்டும்? எப்படி விளங்கிக் கொள்வது?

**பதில் :** நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கர்ம பலன்கள் அனைத்தும் நிச்சயமாக தண்டனையாகக் கொடுக்கப்பட்டவை அல்ல. அவை நம்மை நல்வழிப்படுத்துவதற்காக இறைவனால் கொடுக்கப்பட்டவை.

கர்மபலன்களைக் கண்டு பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. முடிந்த செயல்களை எல்லாம் முடிந்து போனதாக எடுத்துக் கொள்ளுங்கள். இனிமேல் செய்யவிருக்கும் செயல்களை அறிவைப் பயன்படுத்தி சரியான செயல்களைச் செய்யுங்கள். உங்கள் செயல்கள் உங்களையும் மற்றவர்களையும் பாதிக்காமல் பார்த்துக் கொள்வது நல்லது.

மேலும் உங்கள் பிரச்சனையை இரண்டு பகுதியாகப் பிரித்துக்கொண்டு தீர்வு காண்போம். ஒன்று அகம் சார்ந்தது, மற்றொன்று புறம் சார்ந்தது.

எண்ணமும் உணர்வும் நமது அகம் சார்ந்தவை. செயல் என்பது புறத்தைச் சார்ந்தது.

முடிந்து போன செயலைப்பற்றி யோசிப்பது, கர்மபலன்களைப் பற்றி எண்ணிக்கொண்டு இருப்பது, எதிர்காலம் என்னவாகும் என்று யோசிப்பது எல்லாமே அகம் சார்ந்தது. இது முழுக்க முழுக்க நமக்குள் நாம் மட்டுமே யோசித்துக் கொண்டு இருப்பது. நமக்கு மட்டுமே தெரியக்கூடிய ஒன்று. நம்மைத் தவிர மற்றபடி யாருக்கும் இது தெரியாது. அகத்தைப் பொருத்தவரை நாம் செயல்படுவதற்கு எந்த வேலையும் இல்லை என்பதைப் புரிந்து கொள்வதே ஞானம்.

அகத்தில் நாம் எதாவது செய்வதற்கு முயற்சி செய்வதே அத்தனை பிரச்சினைகளுக்கும் மூலகாரணமாக அமைந்துவிடுகிறது. அகத்தில் நல்லது – கெட்டது, பாவம் – புண்ணியம் என்று எதுவும் கிடையாது.

நமது அறிவுப் பகுதிக்கு அகத்தில் எந்த வேலையும் இல்லை.

புறம் என்பது செயல் வடிவமானது. செயல் ஒன்றுதான் நம்மையும் மற்றவரையும் இணைக்கும் பாலம்.

நமது செயலை மட்டுமே மற்றவர்கள் தெரிந்துகொள்ள முடியும். செயலில் நல்லது – கெட்டது, பாவம் – புண்ணியம் என எல்லாமே உண்டு.

அகத்தில் நாம், மனப் போராட்டத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கும் போது புறச் செயல்களை நம்மால் சரியாகச் செய்ய முடியாமலே போய்விடுகிறது.

முடிந்தவரை உங்கள் செயல் சமுதாயத்தில் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்வது நல்லது.

முடிந்த செயல்களை எல்லாம் முடிந்துபோனதாக எடுத்துக்கொள்ள வேண்டும். நீங்கள் செய்யப் போகும் செயலை முடிந்தவரை அறிவைப் பயன்படுத்தி சரியாகச் செய்ய வேண்டும்.

நீங்கள் செய்த செயலை இனி மாற்ற முடியாது. மாற்ற முடியாத நிலையிலும் அதனால் ஏற்பட்ட மனப் பாதிப்பிலிருந்து விடுபடுவது சாத்தியமா?

ஸ்ரீ பகவத் அய்யா கூறிய ஓர் உதாரணத்தின் மூலம் இதை மேலும் தெளிவாக விளங்கிக் கொள்வோம்.

நாம் வெளியூரில் பத்து ஆண்டுகளாகப் பணிபுரிந்துவிட்டு நமது சொந்த ஊருக்குத் திரும்புகிறோம்.

நமது ஊர் மிகவும் மாற்றமடைந்து இருக்கிறது. நமது பழைய நண்பர் ஒருவரை பார்க்கிறோம். நம் பார்த்து பல காலம் ஆகியதால் ஆர்வத்துடன் "எப்படிப்பா இருக்கிறாய்?" என்று நலம் விசாரிக்கிறோம்.

நண்பர் சரியாகப் பதில் அளிக்காமல் ஏதோ ஒன்றை முன்னுக்குப்பின் முரணாகப் பேசி கோபத்தில் நம்மை அறைந்துவிடுகிறார்.

நமக்கு மிகுந்த அவமான உணர்வும் கன்னத்தில் வலியும் ஏற்பட்டுவிடுகிறது.

'சரி என்ன செய்ய முடியும்' என்று நாம் நம் வீட்டை நோக்கி நடக்கிறோம்.

வழியில் இன்னும் ஒரு நண்பரைப் பார்க்கிறோம். நாம் அவரிடம் பேசுவதற்கு யோசித்துக் கொண்டிருக்கும்போதே அவர் நம்மைப் பார்த்து ஆர்வத்துடன் வந்து "எப்படி இருக்கிறாய். பத்து ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டது உன்னை சந்தித்து." என்று பேசத் தொடங்குகிறார். நாம் கொஞ்ச நேரத்திற்கு முன்பாகப் பார்த்த பழைய நண்பரின் சம்பவத்தைத் தெரிவிக்கிறோம். அவர் "ஆமாம். அவன் சற்று மனநிலை பாதிக்கப்பட்டு விட்டான். அதனால் எல்லோரிடமும் அப்படித்தான் நடந்து கொள்கிறான்." என்று கூறுகிறார்.

இப்பொழுது நமக்கு ஏற்பட்ட அவமான உணர்வு, பாதிப்பு என எல்லாமே மாறிப் போய் விடுகிறது.

நாம், பாதிக்கப்பட்ட நண்பருக்கு எந்தவகையில் உதவலாம் என்ற நிலைக்கு மாறி விடுகிறோம். அவர் நம்மை அடித்த அடியின் வலி இன்னும் குறையாத நிலையிலும்கூட நண்பரின் மீது பரிதாப உணர்வு ஏற்பட்டுவிடுகிறது.

இந்த நிகழ்வில், நண்பர் நம்மை அடித்தது என்பது புறம் சார்ந்தது.

இந்த செயலால் நமக்கு மனதில் ஏற்பட்ட அவமான உணர்வும் மனப் பாதிப்பும் அகம் சார்ந்தது. இதற்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது என்ற முடிவுக்கு வருவதுதான் புரிதல்.

புரிந்த நிலையில் எண்ண, உணர்வின் பிடி தளர்ந்து விடுகிறது. மனதில் மாற்றம் தாமாக ஏற்பட்டு விடுகிறது. கன்னத்தில் அறைந்த வலி இருந்தபோதும் கூட நாம் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்வதில்லை, எளிமையாக ஏற்றுக்கொள்கிறோம்.

அகப் பிரச்சினைக்கு ஒன்றும் செய்ய முடியாது என்று புரிந்து ஏற்றுக்கொள்ளும்போது முடிந்துபோன செயலினால் ஏற்பட்ட மனப் பாதிப்பிலிருந்தும் விடுபட்டுவிடுகிறோம்.

நமக்குள் ஏற்படும் கர்மபலனைப் பற்றிய சிந்தனைகள், பயம் போன்றவற்றிற்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது என்ற நிலைக்கு உறுதியாக வந்த நிலையில் செயலின் தேவைப்பாடுகள் கூட குறையத் தொடங்கிவிடும்.

செயலை மாற்றி அமைக்க வேண்டும் என்று முடிவெடுத்துக் கொள்ளுங்கள். எதிர்காலம் பற்றிய சிந்தனை, பய உணர்வுக்கு நமக்கு எந்த வேலையும் இல்லை என்று முடித்துக்கொள்ளுங்கள். மாற்றம் தன்னால் ஏற்பட்டுவிடும்.

எண்ண, உணர்வுகளின் மீதான நமது பிடி தளரும்போது, ஆசை வயப்பட்ட செயல்கள்கூட தேவையற்றதாக மாறிவிடும்.

### ஸ்ரீ பகவத் காட்டேஜ் திறப்பு விழா






காட்டின் நடுவே ஒரு சிறு குடிலில் ஓர் ஞானி வசித்து வந்தார்.

அவர் இயற்கையுடன் ஒன்றி வாழ்ந்தார். மக்களிடம் செல்வதோ, தத்துவங்கள் பேசுவதோ, போதனை செய்வதோ கிடையாது.

ஒரு சமயம் அவ்வழியாகப் புத்தபிட்சுக்கள் சிலர் வந்தனர். அவர்களது முகமே அவர்கள் மிகப் பெரிய படிப்பாளிகள் என்பதை உணர்த்தியது.

வந்தவர்கள் ஞானியைச் சந்தித்து குடிலில் தங்கிச் செல்ல அனுமதி கேட்டனர்.

ஞானியும் சம்மதித்தார்.

"நீங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று வந்தவர்கள் அவரை கேட்டனர்.

"நான் மனதைப் பற்றி தெரிந்து கொண்டு, நான் விரும்பியது போல் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்" என்றார் ஞானி.

இரவு அனைவருக்கும் தேவையான உணவுகளை தயார் செய்து, உணவு பரிமாறினார் ஞானி.

உணவு முடிந்து இரவு அங்கேயே தங்கினர் பிட்சுக்கள். இரவு குளிராய் இருக்கவே குளிர்காயத் தீமூட்டிச் சுற்றிலும் அமர்ந்து கொண்டனர்.

தங்களுக்குள் மெதுவாகப் பேசிக் கொண்டனர். பேச்சு மெல்ல மெல்ல மத சம்பந்தமான தத்துவங்களில் திரும்பியது. அதுவே விவாதமாக மாறியது.

சிறிது நேரத்தில் விவாதம் சூடுபிடித்தது. உரத்த குரலில் அவர்கள் பேச ஆரம்பிக்கவே, தூக்கம் கலைந்த ஞானி மெல்ல எழுந்து வந்து அவர்கள் நடுவில் அமர்ந்தார்.

பிறகு விவாதம் மனிதனின் அகவாழ்வு, புறவாழ்வு பற்றித் திரும்பியது.

"மனிதனின் புறவாழ்வே மாயம். அக வாழ்வுதான் மரணத்துக்குப் பின்பும் தொடரும். எனவே அதுதான் சாசுவதம்!" என்றான் ஒருவன்.

"அகம் என்பதே வெறும் எண்ணங்களின் குவியல். கனவில் கண்ட செல்வம் ஒருவனுக்கு நிஜ வாழ்வில் உதவாது. ஆகவே அகம் என்பது மாயை. தோன்றும் உலகம் தொடரும் வாழ்வு இதுவே உண்மை!" என்றான் வேறொருவன்.

"உலகமே ஒரு மனோ ரீதியான மாயை!" என்பது இன்னொருவரின் வாதம்.

"இல்லை. உலகம் உண்மை. புறநிலையின் பிரத்தியட்சம்!" என்ற கருத்தை வலியுறுத்தினான் ஒருவன்

"உலகம் உண்மைதான். அதைத் தாண்டிய மானஸ வாழ்வும் உண்மைதான். அதையும் தாண்டிய பயணம்தான் மிக முக்கியமானது!" மற்றொருவன் விவாதம் இப்படி இருந்தது.

கடைசியில் தீர்ப்புக் கேட்டு, அவர்கள் ஞானியின் பக்கம் திரும்பினார்கள்.

"உங்கள் கருத்து என்ன? உலகம் பிரத்தியட்சமான உண்மையா?...

"அல்லது மனோ ரீதியான மாயையா?" கேள்விகளால் துளைத்தெடுத்தார்கள் ஞானியை.

"ஞானி அவர்களைப் பார்த்துக் கேட்டார்.

"அதோ ஒரு பெரிய பாறை தெரிகிறதே, அது மனதின் மாயையா? அல்லது பிரத்தியட்சக் கண்கூடா?"

"எல்லாமே மனத்தின் மாயைதான். தோன்றும் பொருட்கள், தோன்றாப் பொருட்கள் யாவுமே மனத்தின் சலனக் காட்சிகள்தான். அந்த வகையில் அந்தப் பெரிய பாறை நிஜம் அல்ல. அது என் மூளையில் இருப்பதுதான்." என்றான் ஒருவன்.

"அவ்வளவு பெரிய பாறையை உங்கள் மூளையில் சுமந்து கொண்டு திரிகிறீர்களே! உங்கள் தலை ரொம்பக் கனக்காதோ?" என்றார் ஞானி.

குரு போட்ட போடு அவர்களுக்கு உண்மையை உணர்த்தியது.

தங்கள் வாத வல்லமைகளையும், அறிவின் கனத்தையும் மூட்டிய தீயில் பொசுக்கிவிட்டு அவரின் சீடராயினர்.

**வரட்டுத் தத்துவங்களைச் சுமந்துகொண்டு விவாதிப்பதை விட, வாழ்க்கைக்குத் தேவையான புறச் செயல்கள் செய்து வாழ்வதே நமக்கும், நம்மைச் சுற்றி உள்ளவர்களுக்கும் இனிமையாக இருக்கும்.**

# ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா

ஸ்ரீ பகவத் குழல்கள்

அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரியகவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் இருப்பிடமான இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றுவருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லாததால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு நிறைவடைந்துள்ளது.

ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா 25-2-2021 வியாழக்கிழமை அன்று காலை 11 மணிக்கு சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் திருக்கரங்களால் திறந்து வைக்கப்பட்டது.

இதனைத் தொடர்ந்து ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் 'இந்த காட்டேஜ் எதற்கு, அதன் தேவை என்ன, நம் நோக்கம் என்ன' என்பதைப் பற்றி விளக்கமாக ஒரு உரை நிகழ்த்தினார்.

இவ்விழா நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப விழாவாக 50 அன்பர்களுடன் சிறப்பாக நடந்தேறியது.

இவ்விழாவிற்கு முதல் நாளே புதன்கிழமை அன்று ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள் தங்கள் குடும்பத்துடன் தம்பதிகளாக வந்து ஒன்றுகூடி தங்கி, உணவருந்தி ஐயாவுடன் உரையாடி மகிழ்ந்திருந்து விழாவை கோலாகலமாக கொண்டாடினர்.

இத் திறப்பு விழா ஒரு குடும்ப நிகழ்ச்சியில் எப்படி இருக்குமோ அப்படியே இருந்தது.

அனைத்து ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்களையும் ஸ்ரீ பகவத் மிஷன் கௌரவித்து சிறப்பித்தது.

இதுவரை 8 பெரிய அறைகளுக்கான



உறுப்பினர்கள் சேர்க்கை நிறைவடைந்ததைத் தொடர்ந்து 5 சிறிய அறைகளுக்கான உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள்.

இன்னும் மூன்று உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளனர்.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

உறுப்பினராக இணைபவரைத் தொடர்ந்து அவருக்குப் பிறகு இந்த உறுப்பினர் தகுதி அவரது குடும்ப உறுப்பினரில் ஒருவருக்கு சேர்ந்து விடும்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், மாதத்திற்கு 20 நாட்கள் வீதம் வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கிச் செல்லலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

**இன்னும் 3 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், வாய்ப்புள்ளவர்கள் உடனடியாகத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.**

**ஸ்ரீ பகவத் மிஷனோடு உங்களது பந்தம் உங்கள் தலைமுறையையும் தாண்டி தொடரட்டும்...**

**அவர்களது வாழ்வும் சிறக்கட்டும்.**

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

Cell : 99942 05880, 97891 65555.

## நிகழ்ச்சி நிழல்கள்

அன்னையர் தினத்தில் நினைவேந்தல் நிகழ்வின் போது.





## ஸ்ரீ பகவத் காட்டேஜ் திறப்பு விழா











# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும்.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி தலைநகரமான சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

மாதத்தில் பாதி நாட்கள் ஐயா சென்னையிலும் பாதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1) ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.

2) சென்னையில் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீபகவத் மிஷன் – ஸ்ரீபகவத் ஐயாவுக்கான பராமரிப்பு உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினை எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழுக் கவனத்தையும் முதலாவது முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/– வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் இதனை குறைந்தபட்சம் இரண்டு வருடங்களுக்கு மட்டுமாவது வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

(ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**

அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்

**ஸ்ரீ பகவத்,**

**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**